★ பிறனை முகஸ்துதி செய்கிறவன் அவன் கால்களுக்கு வலையை விரிக்கிறான்.

★ துஷ்டனுடைய துரோகத்திலே கண்ணியிருக்கிறது. நீதிமானோ பாடி மகிழ்கிறான்.

★ ஞானி மூடனுடன் வழக்காடினால் கோபித்தாலும் சிரித்தாலும் அமைதியில்லை.

★ இரத்தப்பிரியர் உத்தமனைப் பகைக்கிறார்கள், செம்மையானவர்களோ அவனுடைய பிராணனைக் காப்பாற்றுகிறார்கள்.

★ மூடன் தன் உள்ளத்தை யெல்லாம் வெளிப்படுத்துகிறான்; ஞானியோ அதைப் பின்னுக்கு அடக்கி வைக்கிறான்.

★ முன் இருந்தவைகளைப் பற்றி ஞாபகம் இல்லை; அப்படியே பின்வரும் காரியங்களைப் பற்றியும் இனிமேல் இருப்பவர்களுக்கு.

★ அதிக அறிவிலே சலிப்புண்டு; அறிவை பெருக்கினவன் நோவை பெருக்கினவன்.

★ இருளைப் பார்க்கிலும் வெளிச்சம் எவ்வளவு உத்தமமோ, அவ்வளவாய் மதியீனத்தைப் பார்க்கிலும் அறிவு உத்தமம்.

★ மனிதன் புசித்துக் குடித்து, தன் பிரயாசத்தினுடைய பலனை அனுபவிப்பதைப் பார்க்கிலும் அவனுக்கு ஒருவித நன்மையும் இல்லை.

★ மகிழ்ச்சியாயிருப்பதும், உயிரோடிருக்கையில் நன்மை செய்வதுமே அல்லாமல் வேறொரு நன்மையும் மனிதனுக்கு இல்லை.

★ சகல எண்ணங்களையும் சகல செய்கைகளையும் நியாயம் தீர்க்கும் காலம் இனி உண்டு.

★ ஒன்றியாய் இருப்பதிலும் இருவர் கூடியிருப்பது நலம்; அவர்களுடைய பிரயாசத்தினால் அவர்களுக்கு நல்ல பலனுண்டு.

★ சமூகத்தில் நீ துணிகரமாய் உன் வாயினால் பேசாமலும், மனம் பதறி ஒரு வார்த்தையும் சொல்லாமலும் இரு. உன் வார்த்தை சுருக்கமாக இருப்பதாக!

★ தொல்லையின் திரட்சியினாலே சொப்பனம் பிறக்கிறது போல; வார்த்தைகளின் திரட்சியினாலே மூடனின் சத்தம் பிறக்கிறது.

★ விருந்து வீட்டுக்குப் போவதிலும் துக்க வீட்டுக்குப் போவது நலம்; இதிலே எல்லா மனிதரின் முடிவும் காணப்படும். உயிரோடிருக்கிறவன் இதை மனதில் சிந்திப்பான்.

★ ஒருவன் மூடனின் பாட்டைக் கேட்பதிலும் ஞானியின் கடிந்துகொள்ளுதலைக் கேட்பது நலம்.

★ பெருந்தன்மை உள்ளவனைப் பார்க்கிலும் பொறுமையுள்ளவன் உத்தமன்.

★ இந்நாட்களைப் பார்க்கிலும் முன்னாட்கள் நலமாயிருந்தது என்று சொல்லாதே.

★ வாழ்வு காலத்தில் நன்மையை அனுபவித்திரு, தாழ்வு காலத்தில் சிந்தனை செய்.

★ சொல்லப்படும் எல்லா வார்த்தைகளையும் கவனியாதே; கவனித்தால் வீண் நேரம் செல்லும்.

★ செத்த சிங்கத்தைப் பார்க்கிலும் உயிருள்ள நாய் நலம்.

★ இரும்பு ஆயுதம் மழுங்கலாயிருக்க, அதை ஒருவன் தீட்டாமற் போனால், அதிக பலத்தை பிரயோகம் பண்ண வேண்டியதாயிருக்கும். ஆனால் ஒரு காரியத்தை செய்ய அறிவே பிரதானம்.

★ மரமானது தெற்கே விழுந்தாலும் வடக்கே விழுந்தாலும் விழுந்த இடத்திலேயே மரம் கிடக்கும்.

★ ★ ★

★ எந்த விஷயத்தையும் பிறரின் தூண்டுதலின்றி சொந்தமாகவும் ஆழ்ந்தும் பயப்படாமலும் சீர் தூக்கிப் பார்த்து ஒரு முடிவுக்கு வருவதே சிறந்த புத்தியின் இயல்பு:- உபநிஷத்:-

★ ★ ★

★ கையாலே அணாக்காசுக் கிடமே இல்லை;
கூடவென்றால் இருநூறு பொன்மேல் ஆச்சு;
மெய்யாலே கைப்போட்டுக் கொடுத்திட்டாலும்
நீள்வாக்கும் அரண்மனையார் அறிய மாட்டார்
மையாலே பணமிருக்க இதுவும் சும்மா
பார்த்திருக்க நியாயமென்னவோ பாணி ஐயா!
மையாலே தோய்ந்த வாழ் உமையாள் பாகா
மதுரா என்பார்க்கு வளை செய்வாயே.

★ ★ ★

★ "அடக்குமுறையும், அப்பிரியமும் வரும்போதுதான் ஜனங்களின் எதிர்ப்பு கிளம்புகிறது. அது தேசத்துக்கு நல்ல அறிகுறி. தேசத்துக்கு உயிர் இருக்கிறது என்று காட்டும் அறிகுறிதான் அது :- ஸுரேந்திரநாத் பானர்ஜி:-

★ ★ ★

★ "அறிவால்" புரிந்துகொண்டாலும் உணர்ச்சி வேகத்துடன் புரிந்துக் கொள்ள முடியாது. இது போன்ற விஷயங்களில் விஷய அறிவுடன் உணர்ச்சியும் தேவை.

★ பெரிய பாரங்களை சுமப்பதின் மூலம் நாம் வலிமையும் வாழ்வையும் பெற்றதுண்டு- பெறுவதும் உண்டு.

★ பாவம் புண்ணியத்திற்கு அஞ்சலி செய்தது போல் இருக்கிறது.

★ ★ ★

★ தன்னம்பிக்கைத்தான் நம் கைக்குள்ள அடிப்படை.

★ மாடுகட்டிப் போரடித்தால் மாளாது
செந்நெல் என்று
ஆனைகட்டிப் போரடிக்கும் அழகான
தென் மதுரை........